# *Tenral*

# *Malar 3, ital 12*

# *November 17, 1956*

Record no. 947

# தென்றல்

ஆசிரியர்:- கண்ணதாசன்.

உள்நாடு (இலங்கை உட்பட) விலை இரண்டணா. | வெளிநாடு மூன்றணா | அலுவலகம்: 'தென்றல்' சென்னை-6

மலர் 3 | சென்னை | 17—11—56 | சனிக்கிழமை | இதழ் 12

## புளியமரத்தடியிலே புத்திமதி சொன்னவனே

இந்த உலகம் ஏமாற்றுக்காரர்கள் நிறைந்த உலகம். இதுவும் எனக்குத் தெரியும். தெரிந்திருந்தும் ஏமாந்து விட்டேன். இதை நினைத்தால்தான் இன்னும் எனக்கு வருத்தமாய் இருக்கிறது. வருத்தப்பட்டு என்ன செய்ய? காரியந்தான் முந்தி விட்டதே!

முன்னெல்லாம், நான் எங்கே போனாலும், அங்கெல்லாம் என் பின்னால் வருவது இரண்டு 'பிராணிகள்'. ஒன்று நான் 'வளர்த்து வரும் ஆட்டுக் குட்டி'. மற்றது என்னை 'வளைக்க வரும் ஆம்பளைக் குட்டி' இதெல்லாம் மூணு மாசத்துக்கு முன்பு. ஆனால் இப்போது என் பின்னால் வருவது, நன்றியுள்ள அந்தக் கிடாக்குட்டி ஒன்றுமட்டுந்தான். ஆனால், அவன் என் பின்னால் இப்போது வருவதே இல்லை! எப்படி வருவான்? அவனுக்குத்தான் காரியம் முடிந்து விட்டதே! இனி மேல் எதற்காக என் பின்னால் வரப் போகிறான்?

ஏறக்குறைய மூணு மாசத்துக்கு முன்னே, எங்கே நான் இருக்கிறேனோ, அங்கே 'அவன்' இருப்பான்; 'என்றும் ஆடுகிற பம்பரம் நிலைக்க முடியுமா? ...அவன் வார்த்தையை நம்பினேன்; அதனால் வயிறு பெருத்து விட்டது! ஆமாம்; ஓடுகிற தண்ணீரிலே, ஆடுகிற பம்பரத்தை, பம்பரத்தை நம்பியல்லோ நான் வெம்பரத்தை ஆகிவிட்டேன்!

நானும் எவ்வளவோ ஜாக்கிரதையாய்த்தான் இருந்து வந்தேன். "அடுத்த மாசந்தான் பாலை மாத்திடுவாயே; அப்படி இருந்தும் மாட்டேன் என்கிறாயே!—இப்படி அடிக்கடி என்னைத் தொந்தரவு செய்வான். கெஞ்சுவான்; காலைப் பிடித்துக் கொண்டு தொல்லைப்படுத்துவான். என்னை இருகை சேர்த்து இறுக்கி அணைத்து இன்பப் போதை யூட்டுவான் இருந்த போதிலும், நானே சாக்குப் போக்குச் சொல்லிச் சமயத்தைக் கடத்தி வந்தேன்.

மூணு மாசத்துக்கு முன்பு ஒரு நாள்......அயலூரிலே, எங்கள் பந்துக்கள் வீட்டிலே ஒரு கலியாணமாம். எனவே, எனது அப்பனும் ஆத்தாவும் அந்தக் கலியாணத்துக்குப் போய் விட்டார்கள். கலியாணமாகாத பெண்ணைக் கலியாண டது!! செய்த தவறையோ திருப்பித் திருப்பச் செய்வது மனித இயற்கையாமே! நாங்கள் மட்டும் அதற்கு விதி விலக்கா? அது போலவே, "செய்த தவறுக்குத் தண்டனை இல்லை"—என்று, என்றுமே இருந்ததில்லை! எனவே, தண்டனையும் கிடைத்தது. தவறு செய்தது இரண்டு பேரும் சேர்ந்துதான். ஆனால் தண்டனையோ, எனக்கு மட்டுந்தான் கிடைத்தது; அவனுக்கில்லை!...இது என்ன நியாயமோ எனக்குத் தெரியாது!..... ஆனால் எனக்கோ பயங்கரத் தண்டனை கிடைத்தது. அதாவது நான் 'கர்ப்பவதி'! ஆனால், 'கலியாணமாகாதவள்'!!

ஒருவகையாக, இந்த விஷயத்தை அவனிடம் சொன்னேன்; சொல்லி திருமணத்திற்கு ஒரு முடிவு செய்யும்படி வேண்டினேன் "'காரியத்தைச் சாதிக்கப் 'புத்திமதிகள்' பல சொன்னாயே! 'உபதேசங்கள்' பல போதித்தாயே! நீ தொட்டதுமே நான் விட்டுக் கொடுக்க வேண்டுமென்று வேண்டினாயே! 'புத்திமதி' பல சொல்லிக் 'கொத்தி' என்னைத் தின்று விட்டாயே! புத்தி மதிகள் என் ஆத்தாவிடம் இதைச் சொல்லவில்லை.

> "செங்கக் கட்டித் திண்ணையிலே
> தங்கக் கட்டி தூங்கையிலே
> சிங்கக் குட்டி ஒண்ணு வந்து
> பங்கப்படச் செய்
> துட்டுதே"—

இதை எப்படி என் ஆத்தாவிடம் சொல்லுவது? சொன்னால், என்ன சொல்லுவாளோ? எனவே, சொல்லவா? சொல்ல வேண்டாமா? இப்படியெல்லாம் நினைத்து, முடிவிலே சொல்லாமலே இருந்து விட்டேன்.

மூந்தா நாள், 'என் மச்சானை'க் கண்டேன். என்னைக் கண்டதும், அவன் சிரித்தான்; நானும் பதில் சிரிப்பொன்று சிரித்து, அவன் பக்கத்திலே போனேன். பைய இதைச் சொன்னேன்:

> "ஒட்டுத் திண்ணையிலே
> ஒரு நாள் பழக்கத்திலே
> கட்டிச் சீரமெல்லாம்
> 'கசமுசண்ணு' ஆகுதைய்யா!
> வட்டிப் பணம் போல
> வயிறு பெருகுதையா!

## கலியாண மாதத்திலே கையை விரிக்கலாமா?

பான். வேலைக்குக்கூட வெறுத்தொதுக்கி, விரும்பி என்னிடம் ஓடி வருவான்; இனிக்க இனிக்கப் பேசுவான்; என்ன வெல்லாமோ சொல்லுவான். என் அழகை வானளாவப் புகழுவான்; வாய் வலிக்கப் பேசுவான். "காரியம் அரும்வரை கழுதையையும் காலைப் பிடி"—இதைத்தான் அவன் அனுசரித்தானோ, என்னவோ? யார் கண்டது! அவன் சொன்னான்:

> "உன்னை மறக்கமாட்டேன்
> உயர்ந்த கனி திங்கமாட்
> டேன்
> என்னை மறந்தையானல் நீ
> இடையேறப் போவதில்லை"

இப்படி அவன் பேசியதை நான் நம்பி விட்டேன். 'இளமை' என்னும் ஓடுகிற தண்ணீரிலே, 'கன் வீட்டுக்குக் கூட்டிப் போகக்கூடாதாம்; எனவே என்னைமட்டும் ஒத்தையிலே விட்டுப் போய் விட்டார்கள். இதை எப்படியோ 'அவன்' அறிந்து இரவிலே என் வீடு தேடி வந்து விட்டான். வந்தவன், விடாப் பிடியாக விழுந்தடித்து என்னைத் தொந்தரவு செய்தான். நானே மாட்டேனென மறுத்தேன். ஆனால் என் 'பாச்சா' எதுவும் பலிக்கவில்லை. அவன் 'கைதான் ஜெலித்து விட்டது'. அந்த இரவு இன்பமாக இருந்தது; பொழுது போன போக்கே தெரியாது. கோழியும் கூவி விட்டது; இருந்த போதிலும் வெளியே போக மறுத்து விட்டான். எனக்கும் 'போ'—என்று சொல்ல முழு மனசில்லை! அந்த இரவுதான், எங்களுக்கு 'சாந்தி முகூர்த்த'மாகி விட் பல சொல்லி என் புத்தியை மாத்தி விட்டாயே!......ஆனால்...கலியாண மாதத்திலே கவலையின்றித் திரிகிறாயே!

> "புளிய மரத்தடியிலே
> புத்திமதி சொன்னவனே!
> கலியாண மாதத்திலே
> கையை விரிக்கலாமா?"—

இதை நான் அன்போடு கேட்டேன்; வணக்கத்தோடு கேட்டேன்; பிடிவாதத்தோடு கேட்டேன்; அழுது கொண்டும் கேட்டேன். கேட்ட வகை எப்படியானாலும், கேட்டது கிடைக்கவில்லை. அதாவது, கலியாண முடிவை அவன் தெரிவிக்கவில்லை. ஆனால் இதற்குப் பிறகு அவன் என்னைச் சந்திக்க வில்லை; என்னால் அவனைச் சந்திக்க முடியவில்லை.

> சுட்டித் தனம் பண்ணிவிட்டுச்
> சும்மா இருக்கலாமா?
> பட்டி யெல்லாம் சேதி
> பரவி விடும் முன்னே
> அட்டியின்றிக் கலியாணத்தை
> அடுத்த நாளே வச்சிவிடு"—

இதை நான் கும்பிட்டுக் கூத்தாடிக் கேட்டேன். "இம்பிட்டு வருத்தம் உனக்கெதுக்கு? இண்ணைக்குச் சாயந்திரமே, உன் வீட்டுக்கு முன் வந்து பதில் சொல்லுவேன்; கண்டிப்பாய் வருவேன்; கலியாண முடிவுந் தருவேன்"—என்று என் மனசைத் திருப்திப் படுத்திச் சென்று விட்டான்.

அவன் குறித்த சாயந்திரமும் வந்து விட்டது; ஆனால் அவன் வர

— 7-ம் பக்கம் —

# மகாராணி

தூக்குமேடைக்குப் போ என்று நாளையே இந்த நாட்டு மன்னன் உத்தரவிட்டாலும் எனக்கு இனி அக்கரை இல்லை மகாராணி...!

'என்ன சொல்கிறீர்கள்...!'

'என் பேரரசியான தாங்களும் என்னைக் காதலிக்கிறீர்கள் என்பது எனக்குப் புரிந்துவிட்டது. இனி என்னைச் சட்டம் தன் கொடுமைக் கரங்களால் வாட்டி வதைத்தாலும், சர்வேஸ்வரனின் சாபம் என்னைத் தொடர்ந்து வந்தாலும் அவை பற்றிய கவலை எனக்கில்லை! உங்கள் காதல்-அது போதும் எனக்கு - ஆயிரம் தொல்லைகளையும் தாங்கிக் கொள்ள!

'அன்பரே...!'

'என்ன செய்யச் சொல்கிறீர்கள் என்னை...?'

'உள்ளங்கள் ஒன்றுபட்டு விட்டதை உணர்ந்துவிட்டேன் என்று சொல்கிறீர்கள்.. இன்னும் ஏன் அந்த 'தாங்கள்'... 'நீங்கள்' என்ற அடைமொழிகளை அடிக்கடி பயன் படுத்துகிறீர்கள் ஆருயிரே...?'

'இல்லை அன்பே, இனி நிச்சயமாக இல்லை! நமக்குள்ளே எந்தப் பாகுபாடும் இனி இல்லை. நான், இன்று முதல் நீ ஒரு மகாராணி என்பதை நிச்சயமாக மறந்துவிடுகிறேன். வா......வானவெளியில் கவலை யற்றுத் திரியும் வெண்புருக்களைப் போல, நீரோடையிலே வேறு எவ்வித நினைப்புமின்றி நீந்தி உலவும் மீன்களைப்போல ஜோடியாக உலகை நோக்குவோம்...'

'உயிரே...'

'ஓவியமே...'

அவனும் அவளும் தழுவிக் கொண்டார்கள். உதடுகள் உதடுகளோடு பொருந்தி நின்றன.

—'கட்கட்...' என்று குரல் கொடுத்தார் டைரக்டர் சந்தோஷம். அதுவரை ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்த விளக்குகள் ஓய் வெடுத்துக்கொண்டன. எங்கெங்கோ எதை எதையோ கவனித்துக் கொண்டிருந்த எடுபிடிகள் எல்லா வேலைகளையும் விட்டு விட்டு 'செட்'டில் கூடிவிட்டார்கள். 'கேமிரா'க்கள் தங்கள் அலுவல்களை நிறுத்திக் கொண்டன. சிகரெட் புகைகளின் நடுவே சிக்கித்தவிக்கும் சந்தோஷம் நடிகர்கள் நடிக்கும் நேரம் தவிர பிற நேரங்களில் உட்காரும் நாற்காலிகளின் அருகில் வந்தார். அங்கே அவர் எதிர்பார்த்த அவர்கள் இருவரும் வந்து சேரவில்லை. 'செட்'டைத் திரும்பிப் பார்த்தார். அவர் மட்டுமா, அங்கே நின்றிருந்த அத்தனை பேர் கண்களும் அங்கேயே மொய்த்தன. உறவாடிய உதடுகள் இன்னும் விடைபெறவேயில்லை. கரங்கள் கொடியும் கொம்புமென அப்பொழுதுபோல இப்பொழுதும் இணைந்தே நின்றிருந்தன. டைரக்டருக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. திகைப்போடு திரும்பினார். அங்கே அவரது நிலையோடு ஆத்திரமும் உடன்சேர 'நடமாடும் நெருப்பா'க நின்றிருந்தார் சூடாமணி. அடுத்த நிமிடம் அவரது குரல், உருவாகியிருந்த அட்டை அரண்மனையை ஆடவைத்தது.

'வீட்டிற்குப் போகவேண்டும் சுகுணா! சீக்கிரம் வா...'

எந்த உலகிலோ பயணம் செய்து கொண்டிருந்த சுகுணாவையும் சுந்தரையும் சூடாமணியின் குரல் தாங்கள் இருப்பது 'கமலவல்லி ஸ்டுடியோ' என்பதை நினைவூட்டியது. எப்படி எப்படியோ எல்லோருமாகச் சிறிது நேரத்தில் கலைந்து சென்றார்கள். படப்பிடிப்பு ஒத்திவைக்கப்பட்டதாக டைரக்டர் அறிவித்தார்.

★

'மகாராணி' திரைப்படம் வெளியிடப்படும் நாள். 'பூரணி நிலைய'த்தின் மேல்மாடியில் உலவிக்கொண்டிருந்த சூடாமணி செய்வதறியாமல் குழம்பித் தவித்துக்கொண்டிருந்தார். திரைபடத்தைப் பற்றி நினைத்தபோது ஸ்டுடியோ 'செட்'டில் நடைபெற்ற அந்த நிகழ்ச்சியும் அதைத் தொடர்ந்து அவரது கடந்த கால வாழ்க்கைச் சித்திரமும் கண்முன் நின்று ஏதேதோ கதைகள் கூறின.

சூடாமணி இளமை முதலே கலை வேட்கை மிகுந்தவராக இருந்தார். அது நாளடைவில் அவரை பிரபல ஓவியராக்கி, விரைவில் ஒரு சிறந்த பத்திரிகை ஓவியப் பகுதித் தலைவர் பொறுப்பையும் அவரிடம் தந்தது. பகலெல்லாம் மற்றவர்கள் நீட்டும் சித்திரங்களைச் சரி பார்ப்பது, மாலையில் கடற்கரைக்கோ, ஊர்கடந்த வயற்பகுதிகளுக்கோ உலாவச் செல்வது, அவற்றை அடிப்படையாக வைத்து இரவெல்லாம் சித்திரங்கள் வரைவது. இவையே அவரது பணியாக இருந்தன.

இப்படி உலாவ கடற்கரைக்குச் சென்றபோதுதான் அவர் ஒருநாள் சுகுணாவைச் சந்தித்தார். அவருடைய அறிமுகம் அவளுக்கு ஏற்படும்பொழுது அவளது பெயர் சுகுணா அல்ல. அது இவராக அவளுக்குச் சூட்டிய நட்சத்திரப் பெயர். சித்திரங்களில் மட்டுமே காணக்கிடைக்கும் நீண்ட அவளது விழிகளும், சிவப்பேறித் துடித்து நிற்கும் அவளது அதரங்களும் அவரைக் கவர்ந்துவிட்டதில் ஆச்சரியமில்லை. அவளை நெடுநேரம் குறுக்கு விசாரணை செய்தார். தான் ஒரு நாடக நடிகை என்றும் நாடகக்கம்பெனி 'கடைகட்டி'விட்டதால் சொந்த ஊருக்குப் புறப்பட ரயிலுக்குச் சென்றதாகவும் பணம் திருட்டுப் போய்விட்டதென்றும் தெரிவித்தாள். அவளது அழகும், நிலைமையும் அவரை அவசர முடிவுக்கு வரவழைத்தன. அப்பொழுது முதலே சுகுணா சூடாமணியின் பின்னால் நடக்கத் தொடங்கிவிட்டாள்.

ஒன்றரை ஆண்டுகள் ஓடி விட்டன. சுகுணா இப்பொழுது திரை உலகப் பேரரசி – சூடாமணியின் இல்லத்தரசியும்கூட. அவளது பேட்டிக்காக படமுதலாளிகள், டைரக்டர்கள், பத்திரிகை நிருபர்கள், ரசிக 'மகாஜனங்கள்' 'கியூ' வரிசையில் காத்து நின்றனர். சூடாமணி தனது முழுச் செல்வாக்கையும் பயன்படுத்தி, சுகுணாவை நட்சத்திரமாக உயர்த்துவதற்கு அவ்வளவு பாடுபட்டார். அவளது விருப்பப்படியே பத்திரிகை அலுவலிலிருந்து விலகிக்கொண்டார். பணமும் புகழும் சுகுணாவை நாடி ஓடிவந்தன. மனைவியோடு 'சூட்டிங்'கிற்குப் போவது முதல், படங்களுக்கு ஒப்பந்தம் செய்வது வரை எல்லாவற்றையும் அவரே நேரடியாகக் கவனித்து வந்தார்.

டைரக்டர் சந்தோஷம் சூடாமணியின் நண்பர். அவர் 'மகாராணி' என்ற தனது படத்தயாரிப்பில் இறங்கியபோது சுகுணாவையே கதாநாயகியாக ஒப்பந்தம் செய்து கொண்டதில் வியப்பில்லை. ஆனால் புகழ்பெற்ற எந்த நட்சத்திரத்தையும்விட புது முகத்தைக் கதாநாயகனாக ஏற்பாடு செய்யவேண்டும் என்று கருதினார் அவர். அந்த அவரது புது முகவேட்டையில் கிடைத்தவன் தான் நடிகன் சுந்தர். சுந்தர் சினிமாவுக்குத்தான் புது முகமே அல்லாமல், நடிப்புத் துறைக்கே புதியவன் அல்ல. இரவல் குரல்களே நடமாடும் சினிமாப் 'பிரபஞ்ச'த்தில், சொந்தக் குரலில் பாடி, அற்புதமாக நடிக்கும் ஆணழகனான சுந்தரைத் தேடிப் பிடித்து விட்டதில் பெருமைப் பட்டார் சந்தோஷம்.

ஒருநாள் சுகுணாவுக்கு சுந்தர் அறிமுகம் செய்துவைக்கப்பட்டான். வழக்கம்போல சூடாமணியும் உடனிருந்தார். புதிதாக அறிமுகம் செய்விக்கப்பட்டவர்கள் போல அவர்கள் பேசிக்கொள்ளவில்லை. பலகாலம் நட்பிருந்தது அவர்களுக்குள் என்பதை வெளியிட்டது அவர்களது உரையாடல். அப்பொழுது முதலிலே சூடாமணியின் இதயத்தில் சந்தேகம் விதை தூவியது. பிறகு அவர் கொஞ்சம் கொஞ்சமாக சுகுணாவை 'துப்பறியத்' தொடங்கினார். சுந்தரின் பழய வாழ்க்கையை அறிய முயற்சி எடுத்துக்கொண்டார். ஏதோ நாடகக் கம்பெனியில் இருந்தவன் என்பது தவிர வேறு எந்தத் துப்பும் அவருக்குக் கிடைக்கவில்லை. சுந்தரிடம் நேரடியாகவா கேட்கமுடியும்?

'மகாராணி' படப்பிடிப்பு ஆரம்பமாகி நடந்துகொண்டிருந்தது. அன்றுதான் இறுதிக் காட்சிகள் படம் பிடிக்கப்பட்டன. தனது நெருங்கிய உறவினர் ஒருவரோடு பேசிக்கொண்டிருந்த சூடாமணி 'சூட்டிங்' தாமதமாகிவிடக்கூடாதே என்று எண்ணி வழக்கத்திற்கு மாறாக அன்று சுகுணாவைத் தனியாக ஸ்டுடியோவுக்கு அனுப்பி வைத்தார். 'சீக்கிரம் வந்துவிடுங்கள், என்று கூறிவிட்டுச் சென்று விட்டாள் சுகுணா.

ஸ்டுடியோவுக்குப் புறப்படத்தயாரான சூடாமணியை தொடர்ந்து அடித்துக்கொண்டிருந்த 'டெலிபோன்' மணி ஓசை வற்புறுத்தி அழைத்தது. யாராவது படமுதலாளியாக இருக்கும் என்ற எண்ணத்தில் அலட்சியமாக 'போனை'க் கையால் எடுத்தார். மற்றொரு 'சூட்டிங்'கிற்குத் தேவையான 'ஸ்கிரிப்ட்'டை வைத்துவிட்டு வந்துவிட்டதாகவும், வரும்பொழுது எடுத்துக்கொண்டு வரும்படியும் சுகுணாவே 'போனி'ல் பேசினாள்.

'ஸ்கிரிப்ட்'டைத் தேடிக்கொண்டிருந்த சூடாமணிக்கு 'ஸ்கிரிப்ட்'டோடு புதிய கடிதம் ஒன்றும் கிடைத்தது. படித்த கண்கள் அனலைக் கக்கின. ஆமாம், கடிதத்தின் வாசகங்கள் அவரை அப்படித்தான் ஆக்கின.

'அன்புள்ள சுகுணா!

ஒன்றரை ஆண்டுகள் உன்னைத் தேடி அலைந்தேன். எனது இரு கண்களில் ஒன்றான உன்னை இழந்தபின் மற்றொன்றான நடிப்பு எதற்கு என்று அதனையும் விட்டுவிட்டேன். சாதாரண மனிதனாகவாவது வாழ்ந்து தொலைக்க வேண்டிய பணத் தேவையே என்னை 'மகாராணி' மூலம் படத்துறைக்கு அழைத்தது. டைரக்டர் சந்தோஷத்தின் வற்புறுத்தல் வேறு என்னை விடாது துரத்தியது. கடைசியில் எப்படியோ ஒத்துக்கொண்டேன். அப்பொழுதுகூட சுகுணா நீதான் என்பதை நான் அறியவில்லை. நம்மை அறிமுகம் செய்துவைத்தார்களே அன்றுதான் என் உலகம் என்னோடே இருக்கிறது என்பதை நான் அறிந்துகொண்டேன்.

'மகாராணி'! உனக்கு ஏற்ற 'மகாராஜ'னாகும் வாய்ப்பை நான் இழந்துவிடவில்லை என்றே இன்னும் உணர்கிறேன், உன்னிடம் இன்னும் துளிர்விட்டுக் கொண்டிருக்கும் அன்பின்மூலம். சூடாமணியையும் நான் மறந்துவிடவில்லை.

உன்
சுந்தர்...'

கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு என்னென்னவோ எண்ணிக்கொண்டார் சூடாமணி. ஸ்டுடியோவிற்குப் போகவே அவர் பிரியப்படவில்லை. என்றாலும் கொஞ்ச நஞ்சம் இருந்த நம்பிக்கை அவரை அங்கே செல்லத் தூண்டியது. அங்கேதான் 'சூட்டிங்'கோடு சூடாக அவரது நெஞ்சத்தைச் சுட்டுவிட்ட அந்தச் சோகக் கதையின் முக்கிய அத்தியாயம் எழுதப்பட்டது.

★

ஏதோ ஒரு முடிவுக்கு அவர் வருவதற்கும் சுகுணா மேல்மாடிக்கு வருவதற்கும் சரியாக இருந்தது.

— 8-ம் பக்கம் —







"போற்றுபவர் போற்றட்டும் புழுதி வாரித்
தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன்
ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்றால்
எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்; அஞ்சேன்"

# எண்ணம்

மலர் 3 ‖ 17—11—56 ‖ இதழ் 12

## நாவலர் மகிழ...!

தென்னாடெங்கும் சுற்றிய தி.மு. கழகத்தின் தேர்தல் ஆய்வுக் குழுவினரின் அதிகாரப் பூர்வமான ஆதாரங்களை வைத்து கழகத்தின் தலைமைபீடம், வரப்போகும் பொதுத் தேர்தலில் தி. மு. கழகம் 150 இடங்களில் போட்டியிடு மென அறிவித்திருக்கிறது. இந்தச்செய்தி, தென்னாட்டில் ஒரு நல்ல எதிர்க்கட்சி இல்லையென்று நல் லெண்ணத்தோடு வருத்தப் படுவோருக்கு உள்ளத்திலே உவகை பாய்ச்சும். அதேபோது, 'எமை எதிர்க்கவல்லார் யாருளர்?' எனும் தெருக் கூத்து ராஜபார்ட்காரர்களுக்கு இந்தச் செய்தி ஆற்றொணாத் துயரைக் கொடுக்கும். பொதுமக்கள் அனைவருக்கும் நாம் தேர்தலில் கலந்து கொள்ளும் சேதி மகிழ்ச்சியைக் கொடுக்கிறது, எதிர்காலத்தின்பால் ஒரு நம்பிக்கையை வளர்க்கிறது என்பது நமக்கு நன்கு விளங்குகிறது. தகாத போக்கினரைத் தட்டிக் கேட்க ஒரு பெரும்படை சட்டமன்றம் புக இருக்கிறது - என்று கற்றோரும் வாழ்த்துகிறார்கள், கஷ்டத்தில் உழன்ற ஏழைகளும் பெருமூச்சு விடுகிறார்கள்.

தான் நினைப்பதையே மக்கள் நினைபதும், மக்கள் விரும்புவதையே தான் செய்ய நினைப்பதுமான ஒரு நிலைமையை வளர்த்துக் கொண்ட கட்சி இந்தியத் துணைக்கண்டத்திலேயே தி. மு. கழகம் ஒன்று தான் என்பதை நாடு ஒப்புக் கொண்டு விட்டது. எண்ணத்தில் மலர்ந்து எழுத்தில் உருவம் பெற்றிருக்கும்' 'ஏட்டு ஜனநாயகம்' நடைமுறைக்கு வரவாவது தி. மு. கழகம் சட்டமன்றம் புகத்தான் வேண்டும் என்று கைதட்டி வரவேற்கிறது தமிழகம். "கழகத்தைச் சார்ந்த நான்கு, ஐந்து பேர் சட்டசபை போனால் கூடப் போதும்; ஜன நாயகம் பிழைத்துக் கொள்ளும்" என்று அரசியல் அனுபவம் சார்ந்த அறிஞர் பெருந்தகைகள் தட்டிக் கொடுக்கிறார்கள். இத்தனைக்கும் காரணம் என்ன? பொறுப்பேற்றிருக்கும் 'பொறுப்பற்ற காங்கிரஸ்' கட்சிக்கு ஒரு நல்ல எதிர்க்கட்சிஇல்லை.எதிர்த்துப்பேச வகையானஆட்கள்கிடையாது. கொலு வீற்றிருப்போர் கொடி வர்ணத்தில்தான் மாறுதல் பெற்றிருக்கிறார்களேயன்றி கண்ணயர்ந்து தூங்குவதற்கு காங்கிரஸ் பாடும் நீலாம்பரிதான் அவர்களுக்குத் தேவைப்படுகிறது. கூட்டுச் சதிபோல் நடை பெறும் இந்தக் கொலு மண்டபத்தை எத்தனை நாளைக்குத் தான் நாம் விட்டு வைத்திருப்பது? உறக்கத்திற்கும் ஊமைத் தனத்திற்கும் காலவரை யறை கிடையாதா? - தென்னாட்டு அரசியலைக் கழகம் மாற்றியமைக்க விரும்புவதின் நோக்கம் இதுதான். ஆட்சிபீடத்தைக் கைப்பற்றவேண்டும் என்பதைக் காட்டிலும், ஆளுவோரைத் தூயவர்களாக்க வேண்டும் என்பதே பன்மடங்கு சிறந்த தாகும் என தி. மு. கழகம் உறுதியாக நம்புகிறது. அதற்கான தலையாய பணி தான் நாம் தேர்தலில் பங்கேற்பது! யாருடைய நம்பிக்கை, ஆதரவு தேவையோ அவைகளையெல்லாம் பெற்றுக் கொண்டான பிறகுதான் நாம் நமது திட்டத்தைப் பிரகடனப் படுத்தியிருக்கிறோம் என்பதை 'ஞாபக மறதிக்' காரர்கள் அடிக்கடி நினைவிற்கொள்ள வேண்டும்! ஆனால், இந்தப் பெரும்பணிக்கான தேவைகளை இனிமேற் கொண்டு நாமாகத் தான் சேகரித்துக் கொள்ள வேண்டும். 'கழகம் நிதிகேட்டால் - அது காரணத்தோடுதான் இருக்கும்' என்ற புனிதமான பெயர் நம்மை நன்றாக ஒட்டிக்கொண்டிருக்கிறது என்ற தைரியம் நமக்கு இருந்தாலும், இப்போது நாம் கேட்கும் நிதியும் இன்ன பிற தேவைகளும் காலத்தோடு செய்யப் பட வேண்டியவைகளாகும். நெற்கதிரின் பாற்பருவம் முடிந்து, அடுத்த நிலை பெற்றிருக்கும் நேரத்தில் குறித்த காலத்தில் தேவைப்படும் மழைபோன்றது நமது தேவைகளும் - நாம் வேண்டி நிற்கும் நிதித் தொகையும்! தேவை ஐந்துலட்சம்! தொகை பெரிதுதான்; ஆனால் நாம் ஏற்றுக் கொண்டிருக்கும் பெரும் பணிக்குத் தொகை சிறியதுதான்! வாக்குச் சீட்டின் தகுதியை மக்கள் உணர்ந்தவர்கள் என்று நாம் மட்டுமே நம்புகிறபடியால் நமது தொகை குறைந்திருக்கிறது என்பதை மற்றவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். ஆகவே கழகம் வேண்டிநிற்கும் நிதித்தொகையை சேர்த்துத்தர பொது மக்கள் ஒத்துழைக்கவேண்டும். கழகம் நம்பிக்கை மோசத்திற்கு என்றுமே இலக்கானதில்லை என்றாலும் காலம் கண்ணுக்குத் தெரியாமல் பறப்பதாயிற்றே! அதனுடைய மாய இறக்கைகள் ஒரு முறை அடித்து விரிந்தால் கடிகாரத்தின் நிமிஷமுள் நகர்கிறது, மறுநாள் காலண்டரில் ஒரு தாள் கருகி விழுகிறது! அப்பப்பா! திருச்சி மாநில மாநாடு நேற்று நடந்தது போலிருக்கிறது-ஆனால் ஆறுமாதங்களல்லவா ஓடிவிட்டன!

எனவே தமிழ்ப்பெருங் குடியினரே, உங்களது தொட்டில் குழந்தையை மன்றத்தில் பேசவைக்க தேர்தல் நிதி தந்துதவுங்கள்! நீங்கள் அன்புடன் தரும் பணம் கழகத்திற்கு இரட்டிப்பு ஆதரவாகும்! அனுப்புங்கள்! பொதுச்செயலாளர் அறிக்கை விடுத்திருக்கிறார், பொதுத்தேர்தல் வந்து கொண்டிருக்கிறது கழகத்தோழர்களே பொருள் எங்கேஎன்று உரிமையோடுகேட்டுக் கொண்டிருக்கிறார்! நாவன்மைமிக்க நமது நாவலரின் மனங்குளிர தேர்தல் நிதி அனுப்பி உதவுங்கள்! அவரது மகிழ்ச்சி கழகத்தின் வளர்ச்சி! கழகத்தின் வளர்ச்சி அண்ணாவின் பூரிப்பு!

## இருளின் உறைவிடம்!

இருள் நகர்ந்து சென்றது. வானக் கூரையின் மேலும், குன்றுகளின் உச்சியிலும் முகிற் படலங்களிலும் விரித்திருந்த தன் படுக்கையைச் சுருட்டிக் கொண்டே நகர்ந்தது. ஒளி இருளை வெருட்டியது... கோபப்பார்வையுடன் வெருட்டியது. ஒளிக்கதிர் என்னும் வேல்களால் குத்தப்பட்டு இருள் ஓடியது. பள்ளத் தாக்குகளிலே விழுந்தடித்து ஓடியது. கடல் அலைகளிலே தடுமாறித் தளர்வடைந்து ஓடியது.

ஒளி துரத்திக் கொண்டே வந்தது, குன்றிலும், அலையிலும், மலைப் புழைகளிலும், வானிலும்! எங்காவது நுழையப் பார்த்தது இருள். திரும்பிய இடமெல்லாம் ஒளி கையில் வேல்களோடு இருளை எதிர்த்து நின்றது. "அய்யோ, எங்கு செல்வேன்?" என்று பதறிச் சுற்றுமுற்றும் பார்த்தது இருள்.

தூரத்திலே மனிதன் படுத்திருந்தான்.

கண்டது இருள். களி கொண்டது. வெற்றிச் சிரிப்புடன் ஓடியது. ஒளி துரத்திக் கொண்டே வந்தது. இருளுக்கா பயம்? நேராக ஓடி மனிதன் இதயத்திலே புகுந்து கொண்டது! அங்கிருந்து கொண்டு எக்காளத்துடன் ஒளியை எட்டிப்பார்த்து நகைத்தது! ஒளி தலை குனிந்து நின்று விட்டது.

பின் இருள் அங்கேயே குடியிருந்து கொண்டது.

— இலனியன்

## தேர்தல் வருகிறது தெரிந்துகொள்ளுங்கள்!

5. ஏ. சுப்பிரமணியம்—தொடர்ச்சி

— சுயபுராணக் காலட்சேபம் —

'எக்ஸிபிஷ'னுக்கென்று எடுத்த திருவுருவம்
கணபதியைக் கைதொழுது கக்குகிறேன், புராணத்தை!
என்பேரோ சுப்ரமண்யம். எழிலான கோவையிலே
எண்ணற்றோர் ஓர்நாள் இழைத்த பெருந்தவரூல்
உந்திக் கருவாகி, உருண்டு தமிழ்நாட்டு
மண்ணில் பெருஞ்சுமையாய் வந்துதித்தேன்; கல்வியிலே
சட்டப் படிப்புவரை சரியாகத்தான் படுத்தேன்!
பின்னர் தமிழ்நாட்டுப் பெருந்தலையில் ஒன்ருேடு
கட்டித் தழுவிக் காங்கிரசுக் கட்சியிலே
தியாகங்கள் 'மாதிரி'யும் செய்தேன்; அதுவன்றி
சிறைப்பக்கம் கூடத் திரிந்துள்ளேன்; கோவைநகர்
மக்களுக்கு அறிமுகமாய், மந்திரியும் தானுகி
ஆச்சாரியாரின் அவுட்டான திட்டத்தை
நாடறியக் கூவி நறுக்கென்று குட்டுண்டு
மூக்கறுந்து சின்னுள் மூலையிலே உட்கார்ந்து
கற்றறியாச் செல்வம் காமராஜர் துணையில்
மீண்டும் அமைச்சாகி, விளக்கேந்தித் தென்னுட்டில்
ரோந்துசுற்றி வருகின்றேன்; ரோட்டில் திரிவதனே
ஆட்சியிலே வைத்தோமென் றலறும் தமிழ்நாட்டீர்!
கண்ணீர் துடைமின்! கவலையெலாம் நீங்குமின்!
ஓட்டுக் கொடுமின்! உடனே தமிழ்நாட்டைப்
பந்தாகச் சுற்றி, பாலாறு ஓடவிட்டு
தெருவெல்லாம் தேனுக, தேனெல்லாம் வீடாக
மாற்றியமைத்து, வாழ்வு தருவேன் நான்!
நாடெல்லாம் போற்றும் நம்தலைவர் நேருஜீ
அமெரிக்காவுக்கும் ஐரோப்பியர்களுக்கும்
ஈஜிப்டுமக்களுக்கும், இஸ்ரேலுக்கும், ரஷ்ய
நாட்டுக்கும் தூது நடத்திச் சமாதானம்
செய்கின்ருர்; அன்னவரை தேசமெலாம் போற்றுவதால்
எனக்கென்று உங்கள் எழிலான ஓட்டுகளை
மாட்டுக்குப் போட்டு, மானத்தை விற்றுவிட்டு,
'ஜே' போடும்படிக்கு ஜெயிக்கவைப்பீர்! செய்தக்கால்
உலகத்திலெங்கும் உண்மை ஒளி தோன்றும்!
காளையும் பால்கறக்கும்; கழுதையெலாம் இசைபாடும்
'ரெப்ரிஜிரேட்டரிலே உட்கார்ந்து வந்ததுபோல்
சூரியனும் குளிர்ச்சிதரும்; தொலையாப் பசியெல்லாம்
ஆளோடு போகும்! அடுத்த பொதுத்தேர்தல்
வரும்போது இந்நாட்டில் வாழ்கின்ற மக்களிலே
பாதிப்பேர் மட்டும் பாதி உயிரோடு
பரிதவிப்பார், பின் அந்தப் பாதியும் பேதியிலே
சாகும்; தமிழ்நாடு தாளா அமைதியிலே
மூழ்கித் திளைக்கும்; இம் முன்னேற்றப் பாதையினைக்
காட்டுவேன் நான்; எனக்குக் கண்மூடி நீங்களெலாம்
ஓட்டையே போட்டு உட்கார வைப்பீரே!

வாழ்க பஜகோவிந்தம்!
வாழ்க பஜகோவிந்தம்!
விபீஷண நாமசங்கீர்த்தனம்!
விபீஷணு! விபீஷ்ணு!
அனுமந்த நாம சங்கீர்த்தனம்!
அனுமந்தா! அனுமந்தா!

—கதா

முற்றும்.

புலர்ந்து புலராப் பொழுதினைப் போலும்
மலர்ந்து மலரா மலரினைப்போலும்
வளர்ந்து வளரா மான்தனைப்போலும்
இள வயதழகை ஏந்தியமேனிப்
பாவை ஒருத்தி; பாண்டிய நாட்டினள்!
மலை நிகர் தோளில் மாலை அசைந்திட
வாட்படை மாறன், வாழிய முழக்கொடும்
உலா வரும் காட்சியை உவந்துகண்டனள்!
கண்டாற் போதுமே கவிஞனின் படைப்பில்!
காதல் வந்தது, காத்திருந்ததுபோல்!
கண்ணை இழுத்தது, கருத்தை வளைத்தது!
கைவளை சோர்ந்தது; கலையும் நெகிழ்ந்தது!
உருகி உருகி உடலம்கருகி
உள்ளெலும் பெங்கும் வெள்ளம் பெருகி
மறக்க முடியா நிலையில் மாறனை
மனத்தினிருத்தி மயங்கினள் கன்னி.
சோலை புகுந்தாற் தோற்றம் பாண்டியன்!
சுவரும் கூரையும் தொடரும் பாண்டியன்!
கன்னியறியா நிலையிற் கைவளை
கழன்று விழுந்தது; காரிகை பள்ளியிற்
சாய்ந்துமெல்லச் சாத்தினள் இமையை
கனவு வந்தது; காளையும் வந்தான்!
கையைப் பற்றி, கைவளை கொண்டான்!
கண்ணைத் திறந்த காரிகை கையைத்
தடவிப் பார்த்தனள்; தளிர் படுகையில்
வளையல் இல்லை! மாறன் உண்மையில்
வந்து வளையைக் கொண்டனன் என்று
மனத்திலெண்ணி, மறுநாள் பாண்டியன்
உலாவரும் போது, உருவம் உண்டனள்!
துயிலச் சென்றனள்; துயிலும் போது
பாண்டிய வழுதி பாவையின் கண்களில்
களிற்ருெடும் வந்து கலந்தது போலக்
கண்டு, கண்களை கையால் மூடி
தாயரைப் பார்த்துத், "தாயரே! ஆவி
களையினும் எனது கண்களைத் திறவேன்!
கள்ளன் பாண்டியன் கண்களுக்குள்ளே
உள்ளனன்; அவனை உங்களிடத்துக்
காட்டக் கையைத்திறவேன்"
க்தறினுள்! அந்தக் கையிடை வழுதி
யானையோடும் உள்ளனன் என்னும்
அழகிய கருத்து அமைந்த இதனை
முத்தொள்ளாயிர முகையிற் காணலாம்!

அது இது:

தளையவிழும் பூங்கோதைத் தாயரே! ஆவி
களையினுமென் கைதிறந்து காட்டேன்—வளைகொடுபோம்
வன்கண்ணன் வாண்மாறன் மால்யானை தன்னுடன்வந்
தென்கண் புகுந்தா னிரா.

— முத். 38.

## இலக்கியத்தில் காதல்

தாரை முத்துப்புலவர்



## மனம் போல வாழ்வு

7

அந்த முகமாற்றத்திற்குக் காரணம் இல்லாமலில்லை. கைது செய்யப்பட்ட மாணிக்கம் தான், சரசுவின் காதலன். பையன் சுபாவத்தில் நல்லவன் தான். அதோடு அழகாகவும் இருப்பான். வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவன்! ஆனுல் கூடச்சேர்ந்த கூட்டம் அவனை கெடுத்துவிட்டது. அளவுக்கு மேல் தேவைகளும் ஆசைகளும் தலைகாட்டின. கள்ள நோட்டுக்களை மாற்றித் தரும் வேலையில் ஈடுபட்டான். பிடிபட்டான்.

அவன் சரசுவைப் பலமுறை பார்த்திருக்கிருன். அவன் தன் தாயைப் பார்க்க வரும் போதெல்லாம். அவன் வந்து அமரும் முன்கட்டிலேயே வட்டமிட்டுக் கொண்டிருப்பான். அவளுக்கும் அவனைப் பிடித்திருந்தது. வேறென்ன ஆகும்? காதல், காதல், காதல்! அது மெதுவாக இருவரும் பேசுகிற வரைக்கு வளர்ந்து, தனிமையில் சந்திக்கக் கூடிய நிலைக்கு வந்திருந்த போது தான் கள்ளநோட்டு வழக்கில் அவன் பிடிபட்டு விட்டான். கண் கலங்கினுள் சரசு. அண்ணி கோமளத்திற்குத் தெரியாமல் தனி அறையில் உட்கார்ந்திருந்தாள். கோமளம் அங்கேயே வந்து அவள் நிலையைத் தான் புரிந்து கொண்டதாகக் காட்டிக் கொண்டு, விசாரிக்க ஆரம்பித்தாள். முதலில் தயங்கிய சரசு, பிறகு மெள்ள, மெள்ளத் தன் காதல் வரலாற்றைக் கூறிவிட்டாள். கோமளம் மாணிக்கத்தை விடுவிப்பதற்கு முயற்சி செய்யும்படி தேசானந்தரிடம் கூறினுள். அதுவரைக்கு மோவ மீன் நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த தேசானந்தர் துள்ளி நிமிர்ந்து உட்கார்ந்தார். அவரது பிரசங்கம் ஆரம்பமாயிற்று.

'என்ன சொன்னுய் கோமளம்? மாணிக்கத்தை விடுவிப்பதா? ஜனவிரோதமான காரியங்களைச் செய்பவர்கள் தண்டனையை அடைந்து தான் தீர வேண்டும். மக்களின் வாழ்க்கை முறையை ஒழுங்கு நியதிக்குள் கட்டுப் படுத்தத்தான் சில சில சட்டங்கள் உருவாகியிருக்கின்றன. வெள்ளைக்காரன் சட்டத்தில் ஆயிரம் ஓட்டைகள் இருக்கலாம். ஆனுல் சமுதாய ஒழுங்கு முறைக்கு அவன் செய்திருக்கும் சட்டம், நாம் அட்சிக்கு வந்தாலும் செயல்படுத்த வேண்டிய சட்டமாகும். அதை ஒருவன் மீறுகிருன் என்ருல், நியாயமான தண்டனை அவனுக்குக் கொடுக்கப்படத்தான் வேண்டும். உனக்கும் எனக்கும் சட்டம் வளைந்து கொடுக்காது. அது கண்ணீருக்குக் கருணை வழங்கும் சத்திரமல்ல. சரசுவின் முகம் மாறியதை நான் கண்டேன். இருவருக்கும் இடையில் ஏதோ இருக்கவேண்டும் என்பதும் எனக்கும் புரிகிறது. அது இயற்கைதான். அதற்கு நான் குறுக்கே நிற்கவில்லை. ஆனுல் அதற்காக ஒரு நாணய விரோதியைத் தண்டனையிலிருந்து காப்பாற்ற நான் தயாராக இல்லை. காந்திஜி கூட இதைத் தான் கூறியிருக்கிருர். நேற்று நேருஜி பேசிய பேச்சைப் படித்துப் பார்த்தாலும் புரியும்.

ஏன்? மாசிலாமணிச் செட்டியார் வீட்டில் பணமா இல்லை? மாணிக்கத்திற்கு எதற்கு இந்த வேலை? நினைத்தவன் நினைத்தவன் நோட்டு அடிக்க ஆரம்பித்தால் சர்க்கார் என்று ஒன்று எதற்காக இருக்கிறது? ஒவ்வொருவனும் ஒவ்வொரு அச்சாபீஸ் வைத்துக்கொண்டு தேவையான பணத்தை அவ்வப்போது அடித்துக் கொள்ளலாமே! இது சட்ட விரோதம் மட்டுமல்ல; மனித நாகரிகத்துக்கே விரோதம். சமுதாய அடிப்படையே இதனுல் குலைந்து போகும். நிச்சயமாக இதில் தலையிடமாட்டேன். சரசு 'விடம் சொல்லிவிடு"— அவர் பிரசங்கத்தை முடித்து நாற்காலியில் மீண்டும் சாய்ந்தார். அவர் சொன்னதெல்லாம் நியாயம் போலவே தோன்றியதால் எதிர் வார்த்தை கூற முடியாமல் கோமளம் மௌனமாகவே அமர்ந்திருந்தாள். தேசானந்தரின் வார்த்தைகளை சரசுவும் கேட்டுக் கொண்டுதானிருந்தாள். அவருக்கு என்ன பதில் சொல்லுவது என்று அவளுக்கும் புரியவில்லை. அந்த நேரம் பார்த்து மாசிலாமணிச் செட்டியாரும் தேசானந்தரைத்தேடிக்கொண்டு வந்தார். "வாங்க, வாங்க" என்று வரவேற்ருர் தேசானந்தர். கோமளம் எழுந்து உள்ளே சென்று விட்டாள். துயரம் கட்டிய முகத்தோடு அமர்ந்தார் மாசிலாமணிச் செட்டியார். அவர் வந்த காரணம் தேசானந்தருக்கும் புரியுமாதலால் பேச்சைத்தான் துவங்காமல் மௌனமாக இருந்தாள். உதவி கேட்க வந்தவர்கள் கௌரவத்தைத் பார்க்க முடியுமா? மாசிலாமணிச் செட்டியார் முதலில் ஆரம்பித்தார். தேசானந்தரின் கையைப் பிடித்துக் கொண்டு, எப்படியாவது தன் மகனைக் காப்பாற்றும் படிக் கேட்டுக் கொண்டார். தேசானந்தர் முதலில் மறுத்தார். நீதி நியாயச் சொற்பொழிவொன்று நிகழ்த்தினுர். அவர் உதவி தனக்குத் தேவையாதலால் மிகப் பொறுமையுடன் அதைக் கேட்டுக்கொண்டிருந்தார் மாசிலாமணிச் செட்டியார். கடைசியில் ஒரு வழியாக, பையனை ஜாமீனில்விடுவித்துக்கொண்டு வரும் பொறுப்பைத் தான் ஏற்றுக் கொண்டார் தேசனந்தர். அதே நேரத்தில் ஜாமீனில் விடும் பொறுப்பு உள்ளூர் சப்இன்ஸ்பெக்டருக்கு இல்லை யென்றும், சென்னை மாகாணத்தின் பல பகுதிகளையும் சேர்ந்தவர்கள் இந்தக் குற்றத்தில் சம்பந்தப்பட்டிருப்பதால் எல்லாரையும் சென்னைக்கே கொண்டு செல்வதாகவும் அங்கேதான் ரிமாண்டில் வைக்கப் போவதாகவும், சென்னையில் தான் ஜாமீன் எடுக்க வேண்டு மென்றும் மாசிலாமணிச் செட்டியார் கூறினுர். கூறிய அவரின் வேண்டுகோளின் படி, அன்று இரவே சென்னைக்குச் செல்லச் சம்மதித்தார் தேசானந்தர். அன்று இரவு ரயிலில் தான் மாணிக்கமும் சென்னைக்குக் கொண்டு செல்லப்படுவதாக இருந்தது. சரசு தேசானந்தரின் சம்மதத்தைக் கேட்டுக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். கோமளம் அவள் தலையைக் கோதிக் கொடுத்தாள்.

வழக்கம் போல் காரைக் குடியில் ரயிலேறினுர் தேசானந்தர். மிகவும் எச்சரிக்கையோடு தன் பெட்டியை அருகிலேயே வைத்துக் கொண்டார். காலையில் ரயில் சென்னை வந்து சேர்ந்த போது எந்தவிதக் குழப்பமும் இல்லாமல் ரயிலிலிருந்து இறங்கினுர் தேசானந்தர். சென்னைக்கு வந்த பிறகுதான் அவருக்குப் புரிந்தது, கள்ள நோட்டு வழக்கு எவ்வளவு பரபரப்பை உண்டு பண்ணியிருக்கிறது என்பது.

மாணிக்கம் ரிமாண்டில் வைக்கப்படும் சிறை பற்றியும் எந்த மேஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஜாமீன் எடுப்பது என்பது பற்றியும் விசாரித்துத் தெரிந்து கொண்டார் தேசானந்தர். எல்லாக் கைதிகளும் அதே சிறையில் தான் வைக்கப்பட்டிருந்தார்கள். அங்கே போய் பார்த்த போதுதான் அதிர்ச்சி தரக்கூடிய இன்னெரு செய்தி தேசானந்தருக்குக் கிடைத்தது அந்தக் கள்ள நோட்டுக் கூட்டத்தில் ஒரு பெண்ணும் இருக்கிருளாம். அவள் பெயர் சீதாவாம். சீதா என்ற பெயரைக் கேட்டதும் தேசானந்தர் ஒரு துள்ளுத் துள்ளினுர். "சீதா! சூடாமணியின் மனைவி! குழந்தை யிருந்த பெட்டிக்கு உடையவள். தன் சோக வரலாற்றைக் கதையாக எழுதி வைத்தவள். ஆம்! அவளாகத்தான் இருக்க வேண்டும்! தேசானந்தர் அவளைப் பார்க்க விரும்பினுர். ஆனுல் சிறையதிகாரி மறுத்து விட்டார். ஜாமீன் கொடுக்க யாராவது வந்தால் அவளைப் பார்க்கலாம் என்று கூறினுர். உடனே சிறிதும் தயக்கமின்றி தானே அவளுக்கு ஜாமீன் கொடுக்கப்போவதாகத் தேசானந்தர் கூறினுர். சிறிது நேரத்தில் சிறைச்சாலையின் முன் பகுதிக்குச் சீதா கொண்டுவரப்பட்டாள். தேசானந்தர் அவளை கூர்ந்து நோக்கினுர். அவள் அழகாகவே இருந்தாள். இவள் எப்படி இந்தக் கள்ள நோட்டுக் கூட்டத்தில் சிக்கினுள் என்பதே தேசானந்தருக்கு வியப்பாக இருந்தது. இவள் தான் அந்தச் சீதாவா என்பதை அவள் வாயிலாகவே தெரிந்து கொள்ள அவர் முயன்ருர். ஆனுல் அறிமுகம் ஆனவர் போல ஜாமீன் கொடுக்க

— 8-ம் பக்கம் —

# குண்டுவீச்சு: பண்டிதரின் ஆசைக்கனல்

உலக சமாதானத்தைப் பற்றிப் பேசுகின்ற இந்தியத் துணைக் கண்டத்தின் பிரதமர், சமீபத்தில் பேசிய பேச்சொன்றில், தனக்கும் சமாதானத்துக்கும் எத்தவிதத் தொடர்பும் கிடையாது என்பதைச் சொல்லாமல் சொல்லியிருக்கிறார்!

கல்கத்தாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டி சார்பில் நடந்த வாலிபர் மகாநாட்டில் பிரதமர் நேரு திருவாய் மலர்ந்தருளியிருக்கிறார். அந்தக் கூட்டத்திலே கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டதாம். அதை பொறுத்துக் கொள்ள முடியவில்லை போலும், நாட்டிற்குழைத்த அந்த உத்தமரால்! கோபத்திலே கதறி விட்டார், "உங்கள் மீது குண்டு வீசினால்தான் புத்தி வரும். இம்மாதிரி ஜனநெருக்கம் நிறைந்த நகரங்களில் மக்கள் மீது குண்டு போட வேண்டும். அப்போது தான் அவர்களுக்கு புத்தி வரும்; கட்டுப்பாட்டுடன் இருப்பார்கள்'—கூட்டத்தினருக்கு, உத்தமர் காந்தியாரின் உண்மைச் சீடர் தந்த உன்னதமான தத்துவம் இது.

பொதுவாக மனித மனம் கோபத்துக்கு ஆளாவது இயல்புதான். அதற்காக, கோபத்தில் எது வேண்டுமானாலும் சொல்லிவிடலாமா? சாதாரண மனிதருக்கே, இது நியாயமல்ல என்று கூறும்போது, ஒரு நாட்டின் பிரதமர்—ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் முக்கியமானவர்-அவர் போன்ருர் ஆத்திரத்தை அடக்காமல்—வேற்று நாட்டு மக்கள் மீதல்ல—சுய கட்சியினர் மீது குண்டுபோட விரும்புகிருர் என்ருல், உண்மையிலேயே அவரது 'விபரீத சமாதானம்' பற்றி வியக்கிரேம்-வேதனைப்படுகிரேம்.

உண்மையைச் சொல்லப் போனுல் நேரு மனேதத்துவம் அறியாதவர் என்றுதான் புலனுகிறது. அவர் பேச ஆரம்பித்தவுடனேயே கூச்சலும் குழப்பமும் ஏற்பட்டிருக்கிறது. எத்தனேயோ இடங்களில் பேசிய பேச்சையே திரும்பத் திரும்பப் பேசுகின்ற போக்கு உண்மையிலேயே மக்களுக்குப் பிடிக்கவில்லேதான். கூச்சலேக் காதல் கேட்ட பிரதமர், பேச்சை நிறுத்திவிட்டார்; பேசாமல் சென்று அமர்ந்துவிட்டார்; சிறிதுநேரம் கழித்துப் பேச ஆரம்பித்தார். மீண்டும் தொடர்ந்தன குழப்பமும், கூச்சலும். அதன்பின் தான் பாராளும் பிரதமர்—பதைபதைத்தார். ஆத்திரத்தில் விபரீதயோசனையைக் கூறலுற்ருர்.

"மக்களே! கலவரம் செய்யாதீர்கள்! கலவரம்செய்தால் என் பேச்சைக் கேட்க முடியாது போய்விடும்'. எனவே தயவு செய்து கூச்சலை குறையுங்கள்!" இதுதான் ஒரு பேச்சாளி சொல்ல வேண்டிய சொல். நாடாளும் பிரதமர் என்ற எண்ணம் அவருக்கு ஊறிப் போயிருக்குமானுல், 'தயவு செய்து' என்ற சொல்லை வேண்டுமானுல் அவர் உபயோகிக்க வேண்டாம். அவரது தரம் குறைந்து விடலாம்; ஆனுல் அதையெல்லாம் விட்டு விட்டு, 'மக்களே உங்கள் தலையில் குண்டுபோடவேண்டும்' என்று சொன்னுல், அவரது குணத்தைப் பற்றி என்ன எண்ணுவது? வெளிநாட்டுக்கு இந்த நிகழ்ச்சி தெரிந்தால் அவர்கள் இவரைப் பற்றி என்ன எண்ணுவார்கள்?

ஜனநாயக நாட்டு மந்திரி பேசுகின்ற பேச்சாகத் தெரியவில்லை! சர்வாதிகாரத் தன்மையிலே ஊறிப் போன ஒருவர் பேசுகின்ற பேச்சாகவே நமக்குப்படுகிறது. இந்தக் கோபவேசம் அவருக்கு இன்று ஏற்பட்டதல்ல. அவரது ரத்தத்திலேயே உறைந்து போன ஒன்று. தமிழ்மக்களை முன்பொரு சமயம் 'நான் சென்ஸ்' என்று சொன்ன அவரது நாக்குத்தான், இப்போது மக்கள் மீது குண்டு வீசவேண்டும் என்று சொல்ல முற்பட்டிருக்கிறது. தன்னிடம் உள்ள தவறைத் திருத்தி வாழ்பவர்கள்தான் நல்ல மனிதர்கள் என்று மதிக்கப்படுகிருர்கள். ஆனுல் பிரதமர் நேருவோ, தனது ஆத்திரத்தை அடக்கப் பழகிக் கொள்ளாமல், மக்கள் சமுதாயத்தின் மீது பாய்வதையே கொள்கையாகக் கொண்டிருக்கிருர்.

ஜனநெருக்கம் உள்ள நகரத்தில் குண்டு வீசவேண்டுமாம்! அப்படியானுல் நேரு தற்போது வசிக்கும் ஊரான டெல்லியும் ஜனநெருக்கம் உள்ள ஊர்தான். நேருவின் இந்தப் பேச்சு, நுனி மரத்திலிருந்து கொண்டு அடிமரத்தை வெட்டினவன் செயலை நமக்கு நினைவு படுத்துகிறது.

கோபத்தைப் பற்றிச் சொல்ல வந்த பெரிய மனிதர்கள், கோபம், பாபம், சண்டாளம் என்று சொன்னுர்கள். நேருபிரான் அதை அறிந்திருக்க மாட்டார். அப்படிப்பட்டவருக்கு அறிவுறுத்த வேண்டிய பொறுப்பு நம்மைச் சாரும்.

—தமிழ்ப் பித்தன்.

வழக்கறிஞர் திரு. வி. சிவப்பிரகாசம் பி. ஏ., பி. எல். அவர்களுக்கும், திருவிழிமிழலை கிராம முனிசீப் திரு. ஏ. ஆர். எஸ். கல்யாணசுந்தரம் அவர்கள் குமாரி பரமேஸ்வரிக்கும் 26-10-56 அன்று திருவீழிமிழலையில் நடைபெற்ற வாழ்க்கை ஒப்பந்த வைபவத்தையொட்டி, 14-11-56 மாலை தி.மு.கழகத் தலைமை நிலையத்தின் சார்பில், இராயபுரம் அறிவகத்தில் மணமக்களுக்கு விருந்துபசாரம் நடந்தது. கழக முக்கியஸ்தர்களும், கல்லூரி மாணவர்களும் கலந்துகொண்ட அந்த விருந்தில், பொதுச் செயலாளர் திரு. இரா. நெடுஞ்செழியன் அவர்கள் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.





## புளியமரத்தடியிலே..

—1-ம் பக்கத் தொடர்ச்சி—

வில்லே. நானே, வருவான், வருவானென்று, வாசப்படி காத்திருந்தேன். ஆமாம்;—ஒரு வகையாக வந்தான். வந்தவன், என் தெருவழியா வரவில்லே. அடுத்த தெரு வழியே போனன். போனவன் என்னைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லே. எவ்வளவு திமிர் இவனுக்கு?

கரிச்சு மதியடியாம்
கருவண்ணப் பார்வையாம்
அரிச்சலிலே போரவனே
ஆளைத் தெரியலேயா?
தும்ப மலர் வேட்டிடுத்தித்
துடை குலுங்கப் போர
வனே!
தும்ப மலர் வேட்டியிலே
துவண்டவள் நானல்லோ!

முன்போ, என்னைக் கண்டதும் ஓடோடி வருவான். இன்றோ, என்னைக் கண்டதுமே ஒதுங்கிப் போகிருன்!

கொஞ்ச காலேக்கு முன்னுலே, நான் போகும் இடமெல்லாம், என்னிடம் வந்து, வந்து வழி மறிப்பான். ஆனுல் இன்றைக்கோ வழியிலே நானிருந்தும், ஆளைத் தெரியாதவன் போல், அவன் பாட்டுக்குப் போகிருன்!

இன்றைக்குக் காலேயிலே, தோட்டத்திலிருந்து நான் வந்து சொண்டிருந்தேன். தலேயிலே 'புல்லுக்கட்டு' இருந்தது. ஆனுல், வயிற்றிலே 'புலிக்குட்டி' ஒன்று இருப்பதை நினைத்தேன். உடனே எனக்கு ஆத்திரமாக இருந்தது; அழுகையாக வந்தது. அப்போது.....; எதிரே 'அவன்' வந்து கொண்டிருந்தான், அவனேக் கண்டதுமே, எனக்கு 'எரிச்சலும் களிச்சலுமாக' இருந்தது. இன்றைக்கு இவனேச் சும்மா விடக்கூடாது. "தாலி போடுகிறுயா? இல்லேயா? என்று இரண்டில் ஒன்று கேட்டுவிட வேண்டும்—இப்படி முடிவு செய்து இதைக் கேட்டேன்.

"அரக்கு நெஞ்சுப் பட்டுக்
காரா!
பறக்க விட்ட சண்டாளா!
மறக்க வில்லே என்று சொல்லி
மலக் கையுந் தந்தாயே!
என்னைக் கெடுத்தவனே!
எனக்கு மதி சொன்னவனே!
பெண்ணைக் கெடுத்தவனே!
பெண் பாவம் சுத்தாதோ!"

அதற்கு அவன் :

"புல்லுக் கட்டுக்காரி! மல்லுக் கேடியேன் வாரே? சொல்லுரதைச் சொல்லு, கொல்லு கொல்லுன்னு சொல்லுரயே! கோபம் உனக்கெதற்கு என் கோவப் பழமே! உன்னைத் தொட்டவன் நான்; நாலி கட்டிடாமல் விட்டிடுவேனு? வரப்போர புதன்கிழமை நமக்குக் கலியாணம்...அதெல்லாம் சரி...பிறக்கப் போற பயலுக்குப் பேரென்ன வைப்போம் சொல்லு...உம்...என் வெட்கப்படுறே..!' இதைக் கேட்டதும் வெட்கம் என்னைப் பிடுங்கித் தின்றது; சந்தோசம் என்னைக் கட்டி உருட்டியது.

பேச்சை முடித்து விர்ரென்று வீடு வந்தேன். வாசப்படியிலே காலே வைத்தேன். வீட்டுக்குள்ளோ பலர் பேசும் சப்தம் கேட்டது. என்னவென்று பைய எட்டிப் பார்த்தேன்...ஏன் கேட்கிறீர்கள் அதை? வெத்திலே பாக்குத் தாம்பாளத்தைச் சுற்றி என் அப்பன், ஆத்தா, எனக்கு வரப்போர மாமியார்—அதாவது 'அவனுடைய' ஆத்தா—எல்லோரும் இருந்து எங்கள் கலியாணத்தைப் பற்றி முடிவு பண்ணுகிருர்கள்.

சந்தோசத்தைத் தாங்கவே முடியவில்லே. ஏழு நாளிலே நான் 'மனைவி'யாகப் போகிறேன். இதை விட மகிழ்ச்சி தருவது என்னவென்ருல், இன்னும் ஏழு மாதத்திலேயே நான் தாயாகப் போகிறேன், என்பதுதான்.

—அ. பிச்சை

# கவிஞனின் சாவே வாழ்வு!

மேகத்தோடு விளையாடிய கோபுர மாளிகைகள் நிறைந்த அந்த அழகு நகரிலே இருள் கவிழ்ந்தது, பனியை வெண்ணிற ஆடையாகப் போர்த்திக் கொண்டது நகரம். குளிர் தாங்காத மக்கள் தங்கள் இல்லங்களில் தஞ்சமடைந்தனர்..

அப் பெரு நகரின் ஒதுக்குப் புறத்திலே பழைய தோர் வீட்டில், பனியின் பளுவையும் தாங்காமல் சுவர்கள் சரிந்து கொண்டிருந்தன. அவ்வீட்டின் மூலை ஒன்றிலே ஒடிந்த கட்டிலில், கந்தைப் படுக்கையில், மரணத்தோடு போராடிக் கொண்டிருந்தான் ஒருவன். அவனது கண்கள் இருளோடும், காற்றோடும் போராடிக் கொண்டிருந்த சிறு விளக்கையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. அவன் சாவோடு போராடிக் கொண்டு, அணு அணுவாய்ச் செத்துக் கொண்டிருந்தான். அணையப் போகும் அந்த ஜோதியின் முகத்திலே நம்பிக்கையும், துயரப் புன்னகையும் ஒளிவிட்டன.

ஆம்! அவன் ஒரு கவிஞன். தனது கவிதை வரிகளால் மக்களின் உள்ளத்தை எல்லாம் களிக்கச் செய்ய வேண்டும் என எண்ணினுன், ஆனுல், அதற்காக அவன் பெற்ற பரிசுகள்! நினைக்கவே நெஞ்சம் நடுங்கும். பசியால் வாடி, வறுமையோடு போராடி, மரணப்படுக்கையிலே கிடக்கிருன். அந்த இலட்சியக் கவிஞனைப் பார்த்து இந்த மனித சமுதாயம் எள்ளி நகையாடியது! ஆணவத்தோடு சிரித்தது! அவமதித்தது!

அவனது கடைசிமூச்சு இழையோடிக் கொண்டிருந்தது, தனிமையில் அவன் போராடிக் கொண்டிருந்தான். அவனருகே யாருமே இல்லே, மிருந்தான். உடலும், உள்ளமும் ஒரு சேரச் சோர்ந்தநிலேயிலே முனகினுன்,

"சாவே! வா! இப்போதே வா! வந்து என்னே அணைத்துக் கொள்! என் இதயம் உன் வரவுக்காக காத்துக் கிடக்கிறது, உடலெனும் விலங்கில் கட்டுண்டு கிடக்கும் என் ஜீவனுக்கு விடுதலே வழங்கு! அதன் சுமையை என்னுல் தாங்கமுடியவில்லே..இனிமையான சாவே! வா! மனித நீதியைப் போதித்த என்னே, உயர் தத்துவங்களே விளக்கிய என்னே,மக்களின் உள்ளம்மகிழப் பாடிக் குவித்த இந்தக் கவிஞனே, அறிந்து மதிக்காத புன்மையாளர்கள் நிறைந்த இந்தப் பூமியிலிருந்து என்னே அழைத்துச் சென்று விடு! விரைவில்வா! ஏனெனில் மக்கள் என்னே மறந்து விட்டார்கள்! எனது எண்ணங்களே மறுத்து விட்டார்கள்! அவர்களது இதயத்தின் ஒரு மூலேயிலே கூட எனக்கு இடமில்லே.

சாவே! நான் காதலியின் உணர்ச்சி பொங்கும் முகத்தைப் பெற்றதில்லே. தாயின் பாசத்தையும், அணைப்பையும் அறிந்ததில்லே, தங்கையின் குமிழ் சிரிப்பைக் கண்டேனில்லே. வா! காதல் தேங்கிக் கிடக்கும் என் நெஞ்சத்தை உன் நெஞ்சோடு இறுக அணைத்துக் கொள்! அன்புக்காக ஏங்கித் தவிக்கும் என் உடலேத் தழுவிக்கொள்! பாசத்தால் துடி துடிக்கும் என் உதடுகளில் முத்தமிடு! கண்ணீரின் கறை படிந்த எனது கன்னங்களே அனது தாமரைக் கரங்களால் வருடி விடு! கூம்பிக் கிடக்கும் என் இதயத்தை மலரச்செய்! என் இதய வீணையை மீட்டி எழுச்சியுறச் செய்!"

சாவின் கடைசிப் படியில் கிடந்த அந்தக் கவிஞனின் அருகே, சித்திரப் பாவை போன்ற தெய்வீக மங்கை ஒருத்தி வந்து நின்ருள்; அவனே வாரி யெடுத்து நெஞ்சோடு அணைத்துக் கொண்டாள். இயத்தோடு இதயம் கலந்து உறவாடியது; காதல் பொங்க, துடிக்கும் அவனது உதடுகளிலே முத்தமிட்டாள். ஆம்! அந்த முத்தம் அவனது உதடுகளிலே பூரணத்துவத்தின் பொலிவை உண்டாக்கியது. அந்தக் குடிசை காலியாகி விட்டது. மண் குவியலும் காகிதக் கற்றைகளும் தான் அங்கே கிடந்தன.

காலம் சென்றது. அந்த நகரத்தின் மக்கள் அறியாமையில் உழன்றனர். ஆணவத்தாலும், செல்வச் செருக்காலும் தவருன பாதையில் நடந்து சென்றனர்.

காலம் சிறகடித்துப் பறந்து கொண்டிருந்தது. மக்கள் எழுச்சி பெற்றனர். விழித் தெழுந்தனர்.

நகரின் மத்தியிலே கவிஞனின் உருவைப் பளிங்கிலே செதுக்கி வைத்தனர். அந்தச் சிலேக்கு மணி மண்டபம் கட்டினர். ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட ஒரு நாளில் மகர தோரணங்கள் கட்டி, இன்னிசை முழங்க, நாட்டியம், ஒலிக்க, கவிஞனின் புகழ்பாடி, விழாக் கொண்டாடி மகிழ்ந்தனர்.

மக்கள் எவ்வளவு முட்டாள்கள்!!

கவிஞன்—அவன் உயிரோடு வாழும்போது சாவோடு போராட்டம்.

கவிஞன்—அவன் செத்த பிறகு விழா; அதுதான் வாழ்வு,

—சிந்தாமணி

# உலகம் பலவிதம்

மருந்துக் கடை ஒன்றில் ஒரு கனவான் நுழைந்து, "ஏதாவது டூத்-பிரஷ் இருந்தால் காட்டுங்களேன்" என்றார். கடைக்காரர் இரண்டு விதமான பிரஷ்களை எடுத்துக் காட்டினார். வந்தவருக்கு அதில் எது கெட்டியானது, எது மெதுவானது என்று புரியவில்லை. கடைக்காரர் மிகவும் பரிவோடு, "இரண்டையுமே எடுத்துக்கொண்டு போங்கள், ஸார். வேண்டாததை நாளைக்குத் திரும்பக் கொண்டுவந்து கொடுத்து விடலாம்" என்றார்.

வந்தவருக்கு இது ஆச்சரியமாக இருந்தது; கடைக்காரர் சொன்னபடியே இரண்டையும் எடுத்துக்கொண்டு போனார். மறு நாள் மெதுவான பிரஷ்ஷைத் திருப்பிக் கொடுக்க வந்தார்.

கடைக்காரர், "அப்படியானால் மெது பிரஷ் சரிப்படவில்லைபோல் இருக்கிறது! அது தெரிந்த விஷயந்தான். உங்களைச் சேர்த்து இதுவரையில் பத்து பேர் இதை இப்படியே வாங்கிக் கொண்டு போய்த் திருப்பிக் கொடுத்திருக்கிறார்கள் என்றால் பாருங்களேன்!" என்றார்.

☆

ஐந்து வருஷங்கள் ஹாலந்தை ஆண்டு சமீபத்தில் காலமான வில்லெல்மினா என்ற ராணி பத்து வயதில் பட்டத்துக்கு வந்தாள். அந்த முடிசூட்டு விழாவின்போது மண்டபத்தின் திரையைத் தூக்கி அவள் வெளியே பார்த்தாளாம். ஏக ஜனத் திரளாய் இருந்தது. "அம்மா, இத்தனை ஜனங்களும் எனக்குச் சொந்தமா?" என்று கேட்டாள் சிறுமி.

ரீஜண்டாய் இருந்த தாய் "இல்லை, கண்ணே; இல்லை. நீதான் இத்தனை ஜனங்களுக்கும் சொந்தம்" என்றாள்.

★ ★ ★

## மகாராணி...

— 2-ம் பக்கத் தொடர்ச்சி —

'தியேட்டர்களெல்லாம் நிரம்பி விட்டனவாம். படத்தை இன்னும் அரைமணி நேரத்தில் திரையிட விருக்கிறார்களாம். டைரக்டர் சந்தோஷம், சுந்தர் எல்லோரும் வந்துவிட்டார்களாம். நாம் உடனடியாகப் புறப்படவேண்டும் என்று இப்பொழுதுதான் 'போன்' வந்தது' என்றாள் சுகுணா.

'இதோ நான் தயார்...' என்று உடை மாற்றிக்கொண்டு தானே காரை எடுத்தார் சூடாமணி.

'ஏன் டிரைவர் எங்கே...?'- என்றாள் சுகுணா.

'ஒரு இடத்திற்கு அவசரமாகப் போயிருக்கிறான். நான்தான் அனுப்பிவைத்தேன்...' என்றார் அவர்.

'பூரணி நிலய'த்திலிருந்து 'அரசு தியேட்டரை' நோக்கி கார் விரைந்தது. காரின் வேகம் நிமிடத்திற்கு நிமிடம் அதிகரித்தது.

'கொஞ்சம் மெதுவாகப் போங்கள்' என்று முதலில் வேண்டிக்கொண்ட சுகுணா அவர் வேண்டுமென்றே அவ்வளவு வேகமாகப் போவதைக் கண்டு கெஞ்சத் தொடங்கினாள்.

'சுகுணா, நாம் 'மகாராணி' படத்திற்குச் செல்லவில்லை. மரணத்தை நோக்கிச் சென்றுகொண்டிருக்கிறோம். அங்கே, நிச்சயமாக சுந்தர் உன்னைத் தேடிக்கொண்டு வர மாட்டான்...'

சூடாமணி திரைப்பட வில்லர்களைப்போலச் சிரித்தார். அதுதான் அவரது கடைசிச் சிரிப்பாக இருக்க வேண்டும். அடுத்த நிமிடம் கார் எதிரிலிருந்த 'எலக்ட்ரிக் போஸ்ட'ரில் மோதியது.

'ஐயோ' என்று கத்தினாள் சுகுணா.

மறுநாள் பத்திரிகைகள் கொட்டை எழுத்துக்களில் சேதியைத் தமுக்கடித்தன.

'நடிகையின் கணவர் கார் விபத்தில் பலி.'

'மகாராணி' பட விழாவுக்குச் சென்றுகொண்டிருக்கையில் ஏற்பட்ட அவலம்...

'நடிகை சுகுணா சிறு காயங்களுடன் தப்பினாள்.'

இப்பொழுது நடிகை சுகுணா திருமதி சுகுணா-சுந்தராக நடமாடுவதாகக் கேள்வி!

—ப. புகழேந்தி

## மனம்போல வாழ்வு...

—5ம் பக்கத் தொடர்ச்சி —

சம்மதித்து விட்டதால், புது விசாரணை போடத் தயங்கினார். வேறு ஏதேதோ பேசினார். சிறையதிகாரி கொஞ்சம் வேறு பக்கம் போகப் பார்த்து, சீதாவை விசாரிக்க ஆரம்பித்தார். அவள் வாழ்க்கையில் தான் அக்கறையுள்ளவர் என்பதை காட்டிக் கொண்டார். எப்படியும் அவளுக்கு வாழ்வளிப்பதே தன் லட்சியம் என்றும் கூறினார். அந்தப் பெண்ணும் மிக நம்பிக்கையோடு தன் வரலாற்றைக் கூற ஆரம்பித்தாள். அவள் கூறக்கூற தேசானந்தரின் நம்பிக்கை படிப்படியாகத் தளர ஆரம்பித்தது. அவள் வரலாறு தேசானந்தருக்கு முன்பின் சம்பந்தமில்லாத புதிய கதை. அவள் கணவன் சூடாமணியல்ல! யாரோ ராஜாமணியாம். அவனும் இவளுடனேயே சிறைக்கு வந்திருக்கிறானும். தேசானந்தர் தன் அக்கறையைப் படிப்படியாகத் தளர்த்த ஆரம்பித்தார். ஆனாலும் வாக்குக் கொடுத்து விட்டதால் அவளுக்கு ஏதாவது செய்யவேண்டும் போல் தோன்றிற்று அவருக்கு. எப்படியும் தான் அவளை ஜாமீனில் எடுப்பதாக முதலில் வாக்குறுதி கொடுத்திருந்தார். இப்பொழுது ஜாமீன் கொடுப்பதென்றால், அவள் கணவனுக்கும் சேர்ந்தல்லவா கொடுக்க வேண்டும்? "ஏண்டா இந்த வம்பை இழுத்துக் கொண்டோம்" என்று தோன்றிற்று அவருக்கு. அவளை மீண்டும் லாக்கப்பிற்குள் அனுப்பி விட்டு, மாணிக்கத்தை அழைத்துப் பேசி விட்டுத் திரும்பினார் தேசானந்தர். திரும்பி சிறைச்சாலையை விட்டு வெளியில் வந்ததும் எதிரே ஒரு நாடக விளம்பர வண்டியில் எழுதப் பட்டிருந்த விளம்பரத்தைச் சாதாரணமாகப் படித்தார். உடனே கூர்ந்து படித்தார். அந்த வண்டியில் எழுதப் பட்டிருந்தது இது:

> சீதா நடிக்கும்
>
> **சிதைந்த வாழ்வு**
>
> —ஒரு பெண்ணின் சோகக் கதை—
>
> ☆ உண்மையில் நடந்தது ☆
>
> டிக்கட்: ரூ. 5, 3, 2, 1.

(தொடரும்)

## முக்கிய அறிவிப்பு

தென்றல் அடுத்த இதழில் கண்ணதாசன் எழுதும்

### நான் எந்தத் தொகுதி?

என்ற அரசியல் கட்டுரையும் தென்னரசு எழுதும் தைமூரின் காதலியும் மற்றும் பல அம்சங்களும் இடம் பெறுகின்றன. அடுத்த இதழ் வழக்கம் போல் பனிரெண்டு பக்கங்களோடு வெளிவரும்.

19-11-56 அன்று மாலை மதுரை அமெரிக்கன் கல்லூரியிலும், 21-11-56 மாலை சென்னை சட்டக் கல்லூரியிலும் ஆசிரியர் கண்ணதாசன் சொற்பொழிவாற்றுவார்.

☆

## ஏஜண்டுத் தோழர்களுக்கு

தனிப்பட்ட யாருடைய பெயருக்கும் மணியார்டர் அனுப்பக்கூடாது. நிர்வாகி, 'தென்றல்' என்றே அனுப்பவேண்டும். பல்முறை எச்சரித்தும் பயனில்லை. இனி தனிப்பட்டோர் முகவரிக்கு வரும் பணம் கணக்குக்கு வராது.

—நிர்வாகி.

ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ்நாடு

